கோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர்
ல் நிலைய வெளியீடு—4



# ருக்குற்றாலக் குறவஞ்சி

பதிப்பாளர் :

S. கலியாணசுந்தரையர்.



கலா க்ஷேத்திரம்
அடையாறு

விலை : 0-8-0
உரிமை பதிவு

தலமகிமை: திருக்குற்றாலம் என்பது தென்பாண்டி நாட்டிலே சிறப்புற்று விளங்கும் பாடல்பெற்ற ஒரு சிவஸ்தலம். இங்குள்ள மலை மூன்று சிகரங்களையுடையது; அதனால் இது திரிகூடமலை என்று பெயர் பெறும். இத்தலம் அமைந்த நாடு பழைய காலத்தில் தென்னரிய நாடு என்று வழங்கப் பெற்றது. இங்கே அமைந்துள்ள இயற்கைக்காட்சியையும் சிவபெருமானது அருளைப்போல் பொழியும் அருவிகளையும் கண்டுகளிக்கவும் எம்பெருமானை வழிபடவும் திரள் திரளாக யாத்திரிகர்கள் இத்தலத்துக்கு வந்து சிலநாள் தங்கிச் செல்வது வழக்கம். இத்தலத்தின் இயற்கை யழகை ஞான சம்பந்த மூர்த்திகள் இரண்டு பதிகங்களிற் பாராட்டி யுள்ளார்கள். இவரை யன்றி அப்பரும் மாணிக்கவாசகரும் புகழ்ந்துள்ளது இத்தலம். இதற்கு நன்னகர் என்ற பெயர் உண்டு.

இங்கேயுள்ள தீர்த்தங்களுள் வடவருவியும், தேனருவியும், சிவமதுகங்கையும் சிறப்புடையவை. இவற்றுள் வடவருவியுள் மூழ்கினோது பாவம் கழுநீராகப் பிரிந்து ஓடும் என்பது இத்தல ஐதிஹ்யம்; இந்த அருவியில் வானவில் தோன்றுவதை எவருங் காணலாம். இத்தலத்தைச் சார்ந்த பூஞ்சோலை சண்பகாரணியம் என்று பெயர் பெறும்.

சிவபெருமான் இங்கே குறும்பலா மரத்தடியில் எழுந்தருளியிருக்கிறார். இம்மரம் வேதஸ்வரூபம் என்பர் (2). இத்தலத்து அம்பிகையின் திருநாமம் குழல்வாய்மொழி என்பது. இத் தலத்தில் திருமால், பிரமன், உருத்திரன் என்னும் மும்மூர்த்திகளாகப் பண்டைக் காலத்தில் சிவபெருமான் எழுந்தருளினர் என்பது ஸ்தல வரலாறு (5). சித்திரசபை என்ற மன்றில் உமையவள் தாளம் தட்டவும் வாசுகியும் அகத்திய முனிவரும் கண்டு களிக்கவும் சிவபெருமான் தாண்டவம் புரிகின்றார் என்பர். சமயகுரவர்களுடைய பாசுரங்களே யன்றி இத்தலத்துக்கு வேறு பல நூல்களும் உண்டு.

குறவஞ்சிப் பிரபந்தத்தின் தோற்றம்: ஆதியில் குறத்திபாட்டு என்ற ஒன்றே இருந்தது. குறத்தி குறி கூறுதலைத் தெரிவிப்பது அது. அதற்கு இலக்கணம் பன்னிரு பாட்டியலில் அமைந்திருக்கிறது. குறத்தி பாட்டை ஒட்டிக் கலம்பகத்துள் குறம் என்ற ஒரு செய்யுள் இடம் பெற்றது. இதனை அடிப்படையாகக் கொண்டு பிற்காலத்தில் இசைப் பாட்டுக்களால் குறம் என்று வேறொரு வகை நூல் தோன்றியது. அதிலுள்ள செய்யுட்கள் எல்லாம் குறத்தியின் வார்த்தைகளாகவே அமைந்திருக்கும். ஸ்ரீ குமர குருபர சுவாமிகள் அருளிச் செய்த மீனாட்சியம்மை குறம் இப்பிரபந்தத்துக்கு உதாரணமாகும். குறத்தி மலைவளம் முதலியன கூறுவதும், குறி கூறுவதற்கு முன் தரை மெழுகிக் கோல மிட்டுப் பிள்ளையார் வைத்துப் பல பொருள்களைச் சித்தம் செய்யுமாறு சொல்வதும், பிறகு தெய்வத்தைத் தொழுதுவிட்டுத் தலைவிக்குக் குறிகூறுவதும், இறுதியில் பாட்டுடைத் தலைவரை வாழ்த்துவதும் இந்நூலுள் அடங்கிய செய்திகளாகும்.

இக்குறத்தை மாதிரியாக வைத்துக்கொண்டு பிற்காலத்துப் புலவர்கள் குறத்தி குறி கூறுவதை ஒரு நாடக மாக்கிவிட்டனர். நாடக மாக்கும் போது நாடகத்துக்கு அவசியமான இசைகளும் பல பாத்திரங்களின் பேச்சும் கட்டியக்காரன் வருகை முதலியனவும் சேர்த்துக் கொள்ளுவது இன்றியமையாத தாகிவிட்டது. தலைவன் பவனி வருகின்றான்; ஒரு பெண் அவனைக் கண்டு காதல் கொண்டு சந்திரனையும், மன்மதனையும் தென்றல் முதலிய பொருள்களையும் முன்னிலைப் படுத்திப் புலம்பி விரகநோயால் துன்புறுகிறாள்; அச்சமயம் தோழிகள் வந்து பல சைத்தியோபசாரங்கள் செய்து தலைவியைத் தேற்ற முயன்றும் அவள் தேறாளாய் ஒரு தோழியைத் தலைவன்பால் தூது அனுப்புகிறாள். அப்பொழுது ஒரு குறத்தி வந்து மலைவளம், நாட்டுவளம், வாசல் வளம் முதலியவற்றையும் தன் திறனையும் கூறித் தெய்வத்தைத் தொழுது தலைவிக்குக் குறி கூறுகிறாள். இவ்விடத்தில் தலைவியும் குறத்தியும் பேசிக் கொள்ளும் சம்பாஷணை சில குறவஞ்சிகளில் ருசிகரமானது. கடைசியாகத் தலைவி குறத்திக்குப் பலவகை வெகுமதிகளை அளித்து அனுப்பு

கிறுள். )ந்த விதமாகக் குறவஞ்சி விரிவுற்றது. குறவஞ்சி-குறப்பெண்.

குறவனாகிய குளுவனைப் பற்றியும் குறப்பெண்ணைப் பற்றியும் குளுவ நாடகம் என்றொரு நூல் உண்டு. ஒரு குளுவன் தன் கையாளாகிய குறவனுடன் வேட்டை மேற் செல்வதும், பலவகையாக வேட்டை யாடுவதும் இறுதியில் தன்மனைவியாகிய குறத்தியை நினைந்து பிரலாபிப்பதும், அப்பொழுது கையாள் அவனிடம் குறத்தியின் அடையாளங்களைக் கேட்டறிந்து சென்று குறத்தியைக் கண்டு வந்து சொல்வதும் பிறகு குளுவன் குறத்தியைக் கண்டு ஐயுற்று வினவி உரையாடி அவள் ஊடலைத் தீர்த்து ஒன்றுபடுவதும் குளுவ நாடகத்தின் முக்கியமான அமைப்பாகும். குளுவ நாடகம் என்ற பெயரை நோக்கும்போது அது நாடகமாக நடிப்பதற்கென்றே ஒரு காலத்தில் புலவர்களால் எழுதப் பெற்றமை புலனாகும். குறத்தி குறிகூறும் நாடகமும் குளுவ நாடகமும் சேர்ந்ததே குறவஞ்சி என்னும் பிரபந்தமாகும் என்று கூறலாம்.

இவ்விரண்டும் ஒரு நாடகமாக இணைக்கப்பட்டன என்பதற்குச் சில சான்றுகள் உள்ளன.

(1) குறவஞ்சி நாடகத்துள் முன்பகுதிக்கும் பின்பகுதிக்கும் நெருங்கிய தொடர்பு இல்லை. முன்பகுதியோடு தலைவியும் அவளைச் சேர்ந்தாரும் நாடக மேடையை விட்டு மறைந்து விடுகின்றனர். அவர்கள் மேடைக்கு வரும் வாய்ப்புப் பிற்பகுதியில் இல்லை. நாடகவியலுக்கு இவ்வமைப்பு ஒவ்வாது என்பர்.

(2) குறிகூறிய குறத்தி தன் கணவனுடன் பிணங்கிக்கொண்டு வந்தவளென்பது குறவஞ்சியின் பிற்பகுதியால் விளக்கமாகிறது. பல குறவஞ்சிகளில் இக்குறிப்பு முற்பகுதியில் காணப் பெறவில்லை.

(3) குறவஞ்சி ஆதியில் கடவுளரையே பாட்டுடைத் தலைவராகக் கொண்டு இயற்றப்பட்டது. பிற்பாடு புலவர் சிலர் தம்மை ஆதரித்த மன்னர்களையும் பிரபுக்களையும் பாட்டுடைத் தலைவராக்கிக் கொண்டு குறவஞ்சி நூல்கள் எழுதலாயினர். தேவர்களைப் பாட்டுடைத் தலைவராக உள்ள குறவஞ்சிகளை நோக்கும்போது அவற்றுள் முற்பகுதியில் அமைந்துள்ள காதல் தெய்விகமானது.

ஜீவாத்மா பரமாத்மாவை நாடுவதை அது புலப்படுத்துவதாக அமைந்துள்ளது. பிற்பகுதியில் மானிடரை மானிடர் காதலிக்கும் வெறுங்காதலே காணப்படுகிறது. இக்காதலை உணர்த்தும் மொழிகள் இடக்கரானவை; கிராமிய நடை தழுவி எழுந்தவை.

(4) தமிழ் நாட்டில் பொது மக்களின் கலையார்வம் சிலகாரணங்களால் உத்தேசமாக இருநூறு ஆண்டுகளுக்கு முன்பிருந்து மழுங்கிப் போயிற்று. நீண்ட நேர நடிப்பை அவர்கள் உள்ளம் விழைவதாயிற்று. இரவில் தொடங்கும் கூத்து விடியும்வரை ஆடப்பெற்று வந்தமையும் வருவதும் இதற்கு எடுத்துக் காட்டாகும். கிராமியமான நடை உடை பாவனை இசைகளில் அவர்கள் விருப்பம் தோய்ந்தது. இக்காலத் தமிழ்த் திரைப் படங்கள் உதாரணமாகும்; இதனை அறிந்த புலவர்பெருமக்கள் அன்னவர்களை மகிழ்விக்கக் குளுவ நாடகத்தை யுடன் கூட்டிக் குறவஞ்சி நாடகங்களை எழுதலானார்கள் போலும்.

அச்சிலுள்ள குற்றாலக் குறவஞ்சிகளில் ஒருபதிப்பில் குறத்தி குறி கூறுதலும் குளுவ நாடகமும் இருவேறு பகுதிகளாகப் பதிப்பிக்கப் பெற்றுள்ளமை மேலே கூறிய கருத்தை வலியுறுத்தும்.

திருக்குற்றாலக் குறவஞ்சியும் இதன் ஆசிரியரும்: இந்நூல் பதினேழாம் நூற்றாண்டின் இறுதியிலும் பதினெட்டாம் நூற்றாண்டின் முதலிலும் விளங்கிய மேலகரம் ஸ்ரீதிரிகூடராசப்பக் கவிராயர் என்னும் புலவர் திலகரால் இயற்றப்பெற்றது. திருக்கோயிற் கொத்தில் (திருக்கோவிலில் பணிபுரிவோரில்) ஒருவராகிய அக்கவிராயர் இத்தல விஷயமாகப் பதினான்கு பிரபந்தங்களும் ஒரு புராணமும் பாடியிருக்கின்றனர். அவற்றுள் புகழ்பெற்று விளங்குவன குறவஞ்சியும் புராணமுமேயாம். இங்ஙனம் டாக்டர் ஐயரவர்கள் தாம் பதிப்பித்த திருக்குற்றாலச் சிலேடைவெண்பா என்ற நூலின் முகவுரையில் குறித்துள்ளார்கள். பிறிதோரிடத்தில் அவர்கள், ' இப்பொழுதுள்ள குறவஞ்சிகளில் மிகவும் சிறந்தது திருக்குற்றாலக் குறவஞ்சியாகும்; அதனைப் பின்பற்றிப் பல குறவஞ்சிகள் தமிழில் இயற்றப்பட்டுள்ளன ' என்று எழுதியிருக்கிறார்கள். இவையே இதன் பெருமைக்குச் சான்றாகும். இந்நூல் முழுவதும் இலக்கியச் சுவை ததும்புவது. படிக்

குந்தோறும் புதிய புதிய நயங்களைப் புலப்படுத்துவது. இதிலமைந்த இசைப்பகுதிகளிற் பெரும்பாலன வடமொழிப் போக்கை ஒட்டியவை. கதை தழுவிவரும் கூத்தாகலின் இது நாடகமாயிற்று

குறவஞ்சிகளும் நடிப்பும்: எந்தத் தலத்தைப்பற்றி ஒரு குறவஞ்சி எழுதப்பெற்றதோ அது, ஒருகாலத்தில் அந்தத் தலத்தில் நாடகமாக நடிக்கப் பெற்று வந்திருத்தல் வேண்டும். பாபநாச முதலியார் இயற்றிய கும்பேசர் குறவஞ்சி நாடகம் கும்பகோணத்தில் ஒரு காலத்தில் நடிக்கப்பெற்று வந்தமை அந்நூலின் பாயிரத்தால் விளங்கும். இக்காலத்தில் தஞ்சாவூரில் சரபேந்திர பூபாலர் குறவஞ்சி நாடகம் நடிக்கப்பெற்று வருகிறது.

ஸ்ரீமதி ருக்மிணிதேவியாரவர்கள் பழைய இந்தியக் கலைகளை வளர்த்துப் பாதுகாப்பதற்காக அடையாற்றில் கலாக்ஷேத்திரத்தை அமைத்து நடத்திவருகிறார்கள். அவர்கள் தமிழ் நாட்டுக் கலைகளில் ஒன்றாகிய குறவஞ்சி நாடகத்தை நடத்த விரும்பித் தஞ்சைக்குச் சென்று, சரபேந்திர பூபாலர் குறவஞ்சி நாடகநடிப்பை நேரிற் கண்டார்கள். எப்போதோ இறந்துவிட்ட ஒரு மானிடரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு நடிக்கப்பெறும் அந்தக் குறவஞ்சியினிடம் அவர்களுக்கு மனம் செல்லவில்லை. நடிகர்களின் வேடமும் சங்கீதமும் நாடகமேடை நியதிகளும் கலாரசிகர்களைக் கவரவில்லை என்று அவர்கள் எண்ணினார்கள். பிறகு அவர்கள் பல குறவஞ்சி நூல்களைப் பார்வையிட்டுத் திருக் குற்றாலக் குறவஞ்சியே இலக்கியச் சுவையிலும் பிறவகைகளிலும் சிறந்ததென்று அதனைத் தேர்ந்தெடுத்தார்கள். எத்தனையோ ஓவியங்களையும் சிற்பங்களையும் தம் கலைக்கண்ணைக் கொண்டு அவர்கள் ஆராய்ந்தார்கள். வயது முதிர்ந்த பலரிடம் குறவஞ்சி நடிப்பைப் பற்றிக் கேட்டுத் தெரிந்து கொண்டார்கள். நூலறிவும் அவர்களுக்குத் துணைசெய்தது. இந்தச் சாதனங்களைக்கொண்டு அவர்கள் தாமாக நடிப்பையும் நடிகரின் உடை முதலியவற்றையும் ஒருவாறு வரையறைப்படுத்திக் கொண்டார்கள். குளுவ நாடகமாகத் தோன்றும் பிற்பகுதியை விட்டு முற்பகுதியை மட்டும் அவர்கள் நடத்திக்காட்ட முன்வந்தார்கள்.

இக் குறவஞ்சி நாடகம் அவர்களால் வடநாட்டில் பல விடங்களிலும், ஒரு முறை அடையாற்றிலும் நடைபெற்றது. அப்பொழுதெல்லாம் அவர்களுக்கு வந்த பாராட்டுக்கள் பலவாகும்.

இப்பதிப்பு வரலாறு : இந் நாடகத்தை நேரிற் கண்ணுற்ற நண்பர்கள், கலாக்ஷேத்திர நாடக முறைப்படி அமைந்த புத்தகமொன்று அவசியமாகும் என்று குறிப்பிட்டார்கள். அவர்களுடைய விருப்பத்தின்படி இந்நூல் வெளிவருகிறது.

இந்நூலைப் பதிப்பிக்கத் துணையாக இருந்தவை ஐயரவர்கள் நூல் நிலையத்து இரண்டு ஏட்டுச் சுவடிகள் ஆகும். அவற்றுள் ஒன்று குறைப்பிரதி; மற்றொன்று முற்றிலும் திருத்தமாக அமைந்தது. அதன் ஈற்றில் 'குறவஞ்சி முற்றும்; விகாரி வருடம், ஆனிமாதம், உக-ஆம் தேதி புதன்கிழமை' என்ற தொடர் காணப்படுகிறது. எனவே இப்பிரதி இன்றைக்கு 104 ஆண்டுகளுக்கு முற்பட்டதாகத் தெரிகிறது. இப்பிரதியினால் இந்நூல் பலவிடங்களில் நல்ல திருத்தம் பெற்று விளங்குகிறது. அவசியமான இடங்களை விளக்கத் தக்க குறிப்புரை ஒன்று எழுதி இதனுடன் சேர்க்கப் பெற்றுள்ளது. இந் நூல் நிலையத்தின் நான்காம் வெளியீடாக இப்பொழுது இது வெளிவருகிறது.

இந்நூலில் வரும் பாட்டுக்களுக்கு இசைவகுத்துக் கொடுத்துதவிய பெருமை கலாக்ஷேத்திரத்தின் டைரக்டராகிய ஸங்கீத ஸாஹித்ய வித்வான் வீணை ஸ்ரீமான் K. கிருஷ்ணமாச்சாரியார் அவர்களைச் சாரும். அன்னாருக்கு இந்நூல் நிலையம் கடமைப் பட்டுள்ளது. இந்நூலை ஆராய்ச்சிக் குறிப்புக்களுடன் இந்த உருவிற் கொண்டு வருவதற்கு மிகவும் உதவிய இந் நிலையத்தின் நூற்பரிசோதகரும் கலாக்ஷேத்திரத்தின் தமிழ் விரிவுரையாளருமான ஸ்ரீ S. G. கணபதி ஐயரவர்களது நன்றி மறக்கற் பாலதன்று.

அடையாறு,
29-3-1945.

இங்ஙனம்,
S. கலியாணசுந்தரையர்

# திருக்குற்றாலக் குறவஞ்சி

(கலாக்ஷேத்திர நாடகமுறைப்படி)

## காப்பு

(விருத்தம்)

### 1. விநாயகர்

1. பூமலி யிதழி மாலை புனைந்தகுற் றாலத் தீசர்
கோமலர்ப் பாதம் போற்றிக் குறவஞ்சித் தமிழைப் பாட
மாமதத் தருவி பாயும் மலையென வளர்ந்த மேனிக்
காமலி தருப்போ லைந்து கைவலான் [1] காப்புத் தானே.

மலி - நிறைந்த. இதழி - கொன்றை; இது சிவபெருமானுக்கு உரியது. கோ - சிறந்த. மதத்து அருவி பாயும் மலை - யானை. காமலி - காத்தலிற் சிறந்த தரு - கற்பக விருட்சம் முதலிய ஐந்து மரங்கள். அவை சந்தானம், அரிச்சந்தனம், மந்தாரம், பாரிசாதம், கற்பகம். வேண்டுவார்க்கு வேண்டுவனவற்றைக் கொடுத்தலால் இவை உவமையாயின. ஐந்து கரங்களுக்கு ஐந்து தருக்களை உவமை கூறியது நயம்.

(பிரதிபேதம்) [1] 'காவலானே'

### 2. திரிகூட நாதர்

2. கிளைகளாய்க் கிளைத்தபல கொப்பெலாம் சதுர்வேதம்
கிளைக ளீன்ற
கனையெலாம் சிவலிங்கம் கனியெலாம் சிவலிங்கம்
கனிக ளீன்ற
சுளையெலாம் சிவலிங்கம் வித்தெலாம் சிவலிங்க
சொரூப மாக
விளையுமொரு குறும்பலவின் முளைத்தெழுந்த சிவக்கொழுந்தை
வேண்டு வோமே.

கொப்பு - கொம்புகள்; கொம்புகளை வேதம் என்றது வடமொழியில் 'சாகை' என்னும் வழக்குப் பற்றி; சாகை - கொம்பு, வேதப்பிரிவுகள். கனி - பலாப் பிஞ்சு; தென்னாட்டு வழக்கு. பலவு - பலாமரம். வேதமே குறும்பலா வடிவில் இங்கே காட்சியளிப்பதாக இத்தலபுராணம் கூறும். சுயம்பு மூர்த்தியாதலின் 'முளைத் தெழுந்த' என்றார்.

### 3. மாணிக்க வாசகர்

3. நித்தர்திரி கூடலிங்கர் குறவஞ்சி நாடகத்தை
நிகழ்த்த வேண்டி
முத்தர்திரு மேனியெல்லாம் முருகவே தமிழுரைத்த
முனியைப் பாடி
இத்தனுவி லாத்துமம்விட் [1]டேகுநாட் சிலேட்டுமம்வந்
தேறா வண்ணம்
பித்தனடித் துணைசேர்ந்த வாதவூ ரானடிகள்
பேணு வோமே.

முருக - மணக்கும்படி. முனி - அகத்தியர். தனு - உடல். ஆத்துமம் - சீவன். சிலேட்டுமம் - மரணகாலத்தில் உடலில் மேலோங்கி நிற்கும் ஒருநாடி. 'இத்தனுவில் சிலேட்டுமம் ஏறாவண்ணம்' என்று கூட்டுக. பித்தன் சிவபெருமான். வாதவூரான் - திருவாதவூரில் அவதரித்த மாணிக்க வாசகசுவாமிகள். மூன்றாமடியில் சிலேட்டுமம் என்றதற்கு ஏற்ப ஈற்றடியில் பித்தம் வாதம் என்றபெயர்கள் தொனியாக அமைந்துள்ளன. பித்தவாத நாடிகள் ஓங்கியிருக்கையில் சிலேட்டுமம் அடங்கி ஒலிக்கும் என்று மருத்துவ நூலார் கூறுவர். மருத்துவ நூலுக்கு முதலாசிரிய ராதல்பற்றி அகத்திய முனிவரைக் கூறினார்.

(பி - ம்.) [1] 'டிறக்கு நாட்'

### 4. கலைமகள்

4. அடியிணை மலரும் செவ்வாய் ஆம்பலும் சிவப்பி னாளை
நெடியபூங் குழலும் மைக்கண் நீலமும் கறுப்பி னாளைப்
படிவமும் புகழும் செங்கைப் படிகம்போல் வெளுப்பாம் ஞானக்
கொடிதனைத் திருக்குற் றாலக் குறவஞ்சிக் கியம்பு வோமே.

அடியிணை மலர்; மலர் - செந்தாமரை. நீலம் - கருங்குவளை மலர். படிவம் - வடிவம். புகழ் வெண்மைநிறம் என்பது கவிமரபு. கைப்படிகம் - கையிலுள்ள படிகமாலை. இயம்புவோம் - காப்பாகத் துதிப்போம்.

காப்பு முற்றும்.

## திரிகூடநாதர் உலாவருதலைக் கட்டியக்காரன் கூறுதல்

இராகம் நாட்டை—தாளம் ஆதி

5. ப. பவனி வந்தனரே மழைவிடைப் பவனி வந்தனரே

அ. ப. [1] அவனி போற்றிய குறும்ப லாவுறை
மவுன நாயகர் எவன நாயகர்
சிவனு மாயரி அயனு மானவர்
கவன மால்விடை யதனி லேறியே (பவனி)

ச. தடுப்ப தொருகரம் கொடுப்ப தொருகரம்
தரித்த சுடர்மழு விரித்த தொருகரம்
எடுத்த மறிதனைப் பிடித்த தொருகரம்
இலங்கு [2] பணியணி துலங்கவே
[3] அடுத்த ஒருபுலி கொடுத்த சோமனும்
ஆனை கொடுத்த விதானச் சேலையும்
உடுத்த திருமருங் கசைய மலரயன்
கொடுத்த பரிகலம் இசையவே (பவனி)

பவனி - உலா. மழவிடை - இளம் காளை. மவுன நாயகர் என்றது தட்சிணாமூர்த்தியாயிருந்து மோன நிலையில் நால்வர்க்கு உபதேசித்ததை நினைந்து. எவன - யௌவனத்தையுடைய. சிவனுமாய்; சிவன் - உருத்திரன். மும்மூர்த்தி வடிவாகி முத்தொழில் புரிந்து அவர்களுக்கு வேறாகத் துரிய சிவம் என்று ஒருவர் இருக்கிறார் என்பர் சைவர். கவனம் - வேகம். மால் - பெருமை. சிவபெருமான் இங்கே அயனாகவும் திருமாலாகவும் உருத்திர ராகவும் இருந்து விளங்கினார் என்பது தலவரலாறு.

தடுப்பது - அடைந்தோரின் அச்சத்தை நீக்குவது. 'ஒருகரம்' என்பவற்றுள், முன்னது வலக்கரம், பின்னது இடக்கரம்; இவை முறையே அபயம், வரதம் எனப்படும். மறி - மான். பணியணி - பாம்பாகிய நகைகள். புலிகொடுத்த சோமன் - புலியை உரித்து எடுத்த தோல்; சோமன் - ஆடை.

விதானச்சேலை - மேற்போர்வை. தாருகாவனத்து இருடிகள் சிவபிரானைக் கொல்ல அனுப்பியவை மான், மழு, புலி, யானை என்பன. மலரயன் - பிரமன். பரிகலம் - பிரமகபாலம். இசைய - பொருந்த.

(பி - ம்.) [1] 'புவனி' [2] 'மணிப்பணி' [3] 'அடுத்ததொரு'

## பெண்கள் வருகையைக் கட்டியக்காரன் அறிவித்தல்

(விருத்தம்)

6. பாலேறும் விடையில்வருந் திரிகூடப் பெருமானார்
பவனி காணக்
காலேறும் காமனுக்குக் கையேறும் படைப்பவுஞ்சாக்
கன்னி மார்கள்
சேலேறும் கலகவிழிக் கணைதீட்டிப் புருவநெடும்
சிலைகள் கோட்டி
மாலேறப் பொருதுமென்று மணிச்சிலம்பு முரசறைய
வருகின் றாரே.

பாலேறும் - வெள்ளை நிறமுடைய. கால் - தென்றற் காற்று; இது மன்மதனுக்குத் தேர். கைஏறும் படை - கைகளில் தரிக்கின்ற ஆயுதங்கள்; 'கைஏறும்' என்பதற்குப் 'படைவகுப்பில் முன்னேறும்' என்று பொருள் கொள்ளலும் ஆம்; கூழைக் கைக்குள் வருவாணனைக் . . . . கைக் குப்பை கண்டான்' (திருவரங்கத். 41.) பவுஞ்சு ஆ - சேனைகள் ஆக; பெண்களே மன்மதனுக்குச் சேனை. சேல் ஏறும் - சேல்மீனைப் போன்ற. பெண்களைச் சேனை என்றதற்கு ஏற்ப அவர்களுடைய கண் புருவம் சிலம்புகளை முறையே அம்பு வில் முரசு என்றார். சிலம்புக்கு முரசு உவமை: 'ஆர்க்கும் சிலம்பே அணிமுரசா' (நள. க : 32.) மால் ஏற - ஆண்மக்களுக்கு மயக்கம் தோன்ற. பொருதும் - போர் செய்வோம்.

## இராகம் ராகமாலிகை—தாளம் சாபு

கேதாரம்

7. (க) ஒருமானைப் பிடித்துவந்த பெருமானைத் தொடர்ந்துவரும்
ஒருகோடி மான்கள்போல் வருகோடி மடவார்

பைரவி

புரிநூலின் மார்பனிவன் அயனென்பார் அயனுகில்
பொங்கரவம் ஏதுதனிச் சங்கமே தென்பார்.

தன்யாசி

(உ) விரிகருணை மாலென்பார் மாலாகில் விழியின்மேல்
விழியுண்டோ முடியின்மேல் முடியுண்டோ வென்பார்.

பிலகரி

இருபாலும் நான்முகனும் திருமாலும் வருகையால்
ஈசனிவன் திரிகூட [1] வாசனே என்பார்.

பியாகடை

(௩) மைவளையும் குழல்சோரக் கைவளைகொண் டானிதென்ன
மாயமோ சடைதரித்த ஞாயமோ வென்பார்.

சுருட்டி

மெய்வளையும் மறுவுடைய தெய்வநா யகன்முடித்த
வெண்மதியும் விளங்குதெங்கள் பெண்மதிபோ லென்பார்.

சாரங்கா

(௪) ஒருகைவளை பூண்டபெண்கள் ஒருகைவளை பூணமறந்து,
ஓடுவார் நகைப்பவரை நாடுவார் கவிழ்வார்.

*  *  *  *  *

சகாணா

(௫) கருதுமனம் புறம்போக ஒருகண்ணுக்கு மையெடுத்த
கையுமாய் ஒருகணிட்ட மையுமாய் வருவார்.

சாவேரி

நிருபனிவன் நன்னகரத் தெருவிலே நெடுநேரம்
நில்லானோ ஒருவசனம் சொல்லானோ வென்பார்.

(க) தனி - ஒன்றாகிய. சங்கம் - சங்குக்குண்டலம்; சிவபெருமான் வலது காதில் உள்ளது இது; ' சங்கவெண் குழையோர் காதின் கோமாற்கே '

(அப்பர் தே.) (உ) முடி - முன்னது தலை ; பின்னது சடைமுடி. (ங) மைவளை யும் - மேகம் போன்ற ; வளையும் உவமவாசகம். காதல் காரணமாக உடல் மெலிந்து வளைகள் கழன்றமையினல், 'கைவளை கொண்டான்' என்ருள். 'சடைதரித்தவர் காதலை உண்டு பண்ணுதல் நியாயமன்று' என்றபடி. மெய்வளையும் மறுவுடைய மதி - பிறைச்சந்திரன் ; மெய் - உடல். (ச-ஞ) பவனியைக் காணும் ஆவல் மிகுதியினல் பெண்கள் பாதி அலங்காரத்தில் எழுந்து வந்தமை இக்கண்ணிகளிற் கூறப்படுகிறது.

(பி - ம்.) [1] 'ராசனே'

## வசந்தவல்லி பந்தாடுதல்

### (கட்டியக்காரன் விருத்தம்)

8. வித்தகர் திரிகூ டத்தில் வெளிவந்த வசந்த வல்லி
தத்துறு விளையாட் டாலோ தடமுலைப் பணைப்பி னலோ
நத்தணி கரங்கள் சேப்ப நாலடி முன்னே யோங்கிப்
பத்தடி பின்னே வாங்கிப் பந்தடி பயில்கின் ருளே.

நத்து - வளையல்கள். சேப்ப - சிவக்கும்படி.

## பெண்கள் கூறுதல்

### இராகம் ஆனந்தபைரவி—தாளம் ஆதி

9. (க) சூடக முன்கையில் வால்வளை கண்டிரு
தோள்வளை நின்ருடப்—புனை
பாடக முஞ்சிறு பாதமு மங்கொரு
பாவனை கொண்டாட—நய
நாடக மாடிய தோகை மயிலென
நன்னகர் வீதியிலே—அணி
ஆடக வல்லி வசந்தனய் யாரி
அடர்ந்துபந் தாடினளே.

(உ) இந்திரை யோஇவள் சுந்தரி யோதெய்வ
[1] இரம்பையோ மோகினியோ—மனம்
முந்திய [2] தோவிழி முந்திய தோகரம்
முந்திய தோவெனவே—உயர்

சந்திர சூடர் குறும்பல வீசுரர்
சங்கணி வீதியிலே—மணிப்
பைந்தொடி நாரி வசந்த ஒய் யாரி
படர்ந்துபந் தாடினளே.

சூடகம்-வளை வகைகளுள் ஒன்று. வால்-வெண்மை. பாடகம்-காலில் அணியும் ஓர் அணி. ஆடக வல்லி - பொற்கொடி.

(பி - ம்.) [1] 'ரம்பையோ', 'இரம்பை மோகினியோ' [2] 'தோகர முந்தி யதோ விழி'

## வசந்தவல்லி திரிகூடநாதரைக் காணுதல்

(கட்டியக்காரன் விருத்தம்)

10. வருசங்க வீதி தன்னில் வசந்தபூங் கோதை காலில்
இருபந்து குதிகொண் டாட இருபந்து முலைகொண் டாட
ஒருபந்து கைகொண் டாட ஒருசெப்பி லைந்து பந்தும்
தெரிகொண்டு வித்தை யாடும் சித்தரை எதிர்கண் டாளே.

இத்தலத்திலுள்ள வீதி சங்கவீதி என்றும் கோயில் சங்கக்கோயில் என்றும் வழங்கும்; 'சங்கவீதி பொற்கந்தாம்,' 'தலங்களழி யினுமழியாச் சங்கக் கோயில்' (திருக்குற்றலப். தலமகிமை, 12, 27.) செப்பு என்றது உலகத்தை. ஐந்து பந்து - பஞ்ச பூதங்கள்.

## வசந்தவல்லி மயல் கொள்ளுதல்

இராகம் அடாணு—தாளம் ரூபகம்

11. ப. இந்தச் சித்த ராரோ-வெகு
விந்தைக் கார ராக விடையி லேறி வந்தார் (இந்தச்)

ச. (க) நாகம் புயத்திற் கட்டி நஞ்சு கழுத்திற் கட்டிக்
காக மணுகாமலே காடு தாங்கியும் கட்டிப்
பாகந் தனிலொருபெண் பச்சைக் கிளிபோல் வைத்து
[1] மோகமாய் ஒருபெண்ணை முடியில் வைத்தார் (இந்தச்)

(உ) [2] அரிக்கண் பார்வை யாலென் அங்கம் தங்கமாக
உருக்கிப் போட்டார் கண்ட வுடனே தான்

பெருக்கம் பார்க்கி லெங்கள் திருக்குற்றாலர் போலே
இருக்கு [3] அதிசயமாய் ஒருக்காலே (இந்தச்)

(க) திரிகூடமலை காக மணுகாதது; 33. காடுதாங்கி - உலா வரும் போது சுவாமிக்குப் பின்னே இடும் மறைப்புச்சேலை. (உ) அரிக்கண் - செவ்வரி படர்ந்த கண். 'நெருப்பாகிய கண்' என்பது தொனிப்பொருள்; அரி - தீ. பெருக்கம் - ஏற்றம்.

(பி - ம்.) [1] 'மோகம் பெற' [2] 'அருட்கண்' [3] 'திவர்செய் மாயம்'

(கட்டியக்காரன் விருத்தம்)

12. திங்களை முடித்தார் கண்டாய்
திரிகூடச் செல்வர் கண்டாய்
எங்குள சித்துக் கெல்லாம்
இறையவர் இவரே யென்று
நங்கைமார் பலரும் [1] கூறு
நன்மொழித் தேறல் மாந்தி
மங்கையாம் வசந்த வல்லி
மனங்கொண்டாள் மயல்கொண் டாளே.

எங்குள - எங்கும் உள்ள. தேறல் - தேன்.

(பி - ம்.) [1] 'கூற'

வசந்தவல்லி இரங்கல்

இராகம் பந்துவராளி—தாளம் ரூபகம்

13. (க) முனிபரவும் இனியானோ—வேத
முழுப் பலவின் கனிதானோ
கனியில் வைத்த செந்தேனோ—[1] என்னைக்
கருத்தழிக்க வந்தானோ
தினகரன்போற் சிவப்பழகும்—இவன்
திருமிடற்றிற் கறுப்பழகும்
பனகவணி யிருகாதும்—கண்டால்
பாவையுந்தான் உருகாதோ

(உ) வாகனைக்கண் டுருகுதையோ—ஒரு
மயக்கமதாய் வருகுதையோ
மோகமென்ப திதுதானோ—இதை
[2]முன்னமேதா னறிந்தேனோ
ஆகமெல்லாம் பசந்தேனே—பெற்ற
அன்னைசொல்லும் கசந்தேனே
தாகமன்றிப் பூணேனே—கையில்
சரிவளைகள் காணேனே.

(க) முனி - அகத்தியமுனி. தினகரன் - சூரியன். மிடறு - கழுத்து. பனகம்=பன்னகம் - பாம்பு. (உ) வாகன் - அழகன். ஆகம் - உடல். காதலால் உடல் பசக்கும் என்பர்.

(பி - ம்.) [1] 'பெண்கள்' [2] 'முன்னமே நானறிவேனோ'

## வசந்தவல்லிக்குத் தோழிகள் செய்த உபசாரம்

(கட்டியக்காரன் விருத்தம்)

14. வானவர் திருக்குற் றாலர் மையலால் வசந்த வல்லி
தானுடல் சோர்ந்தா ளென்று தமனிய மாடஞ் சேர்த்து
மேனியா ரழகு தோற்ற மின்னனார் விழுந்த பேரைக்
கூனைகொண் டமிழ்த்து வார்போல் குளிர்ச்சியால் வெதுப்பு வாரே.

தமனியம் - பொன். கூனை - பெரியபானை ; 'கூனை யுங்குட முங்குண்டு சட்டியும், பானையும் பண்ணு மங்குசப் பையல் யான்' (தனிப்.)

(கட்டியக்காரன் தரு)

இராகம் சங்கராபரணம்—தாளம் ஆதி

15. (க) முருகு சந்தனக் குழம்பு பூசுவார்—விரகத் தீயை
மூட்டி மூட்டி விசிறி வீசுவார்
கருகு தேயுடல் உருகு தேயென்பார்—விரித்த [1] பூவும்
கரியு தேமுகத் தம் பொரியு தேயென்பார்.

(உ) அருகி லிருந்து கதைகள் நடத்துவார்—எடுத்துமாதர்
அணைத்து வாழைக் குருத்திற் கிடத்துவார்

பெருகு நன்னகர்க் குறும்ப லாவினர்—வசந்தமோகினி
பெருநி லாவினொடு [2] கலாவினள்.

முருகு - வாசனை. விரித்த - படுக்கையில் விரித்த.

(பி - ம்.) [1] ‘தளிரும்’ [2] ‘குலாவினள்’

6

## வசந்தவல்லி சந்திரனைப் பழித்தல்

(கண்ணிகள்)

16. (க) தண்ணமு துடன்பிறந்தாய் வெண்ணிலாவே—அந்தத்
தண்ணளியை என்மறந்தாய் வெண்ணிலாவே
பெண்ணுடன் பிறந்ததுண்டே வெண்ணிலாவே—என்றன்
பெண்மைகண்டும் காயலாமோ வெண்ணிலாவே.

(உ) விண்ணிலே பிறந்ததற்கோ வெண்ணிலாவே—எரு
விட்டுநான் எறிந்ததற்கோ வெண்ணிலாவே
கண்ணில்விழி யாதவர்போல் வெண்ணிலாவே—மெத்தக்
காந்தியாட்டம் ஆடுகிறாய் வெண்ணிலாவே.

(ங) ஆகடியம் செய்தல்லவோ வெண்ணிலாவே—நீதான்
ஆட்கடியன் போற்குறைந்தாய் வெண்ணிலாவே
மோகன்வரக் காணேனென்றால் வெண்ணிலாவே—இந்த
வேகமுனக் கானதென்ன வெண்ணிலாவே.

(ச) நாகமென்றே எண்ணவேண்டாம் வெண்ணிலாவே—இது
[1] வார்குழலின் பின்னல்கண்டாய் வெண்ணிலாவே
கோகனக வீறழித்தாய் வெண்ணிலாவே—திரி
கூடலிங்கர் முன்போய்க்காய்வாய் வெண்ணிலாவே.

(உ) எரு - காய்ந்து கிடக்கும் சாணஉண்டை. எறிந்தது அறியாப் பருவத்தில்; சிறுகுழந்தைகள் கைக்குக் கிடைத்தபொருள்களால் சந்திரன்மேல் எறிந்து விளையாடுவது வழக்கம். (ங) ஆகடியம் - அநியாயம்; ‘அஞ்சமுதமுண்டாகடியக் காராரிவர்’ (திருப்புகழ்.) ஆட்கு அடியன் - ஆளுக்கு ஆளானவன். (ச) நாகம் - இராகு கேதுக்கள். கோகனகம் - தாமரை. ‘மடிவிலின்னமு தத்தொடும் வந்தனை . . . . . . எனைச் சுடுதி யோகடற்றோன்றிய திங்களே’, ‘கல்லா மதியே கதிர்வாள் நிலவே, . . . . எல்லாம். எனையே முனிவீர் நினையா, வில்லா ளனையா தும்விளித் திலரே’ (கம்ப.

க. மிதிலைக். 77, ரு. கணையாழிப். 4); 'செய்ய கமல மலர்கூம்பச் சேர்ந்த கொடிய வெண்டிங்காள்', 'சுடர்கான் றெழுந்த வெண்டிங்காள் என்னே சுடுதி யாரமுதத் துடனீபிறந்த பாற்கடலின் றண்மை யுணராய்' (நைடத. சந்திரோ. 2, 10) முதலியவை இப்பாட்டுடன் ஒப்பிடத்தக்கன.

(பி - ம்.) [1] 'வாருகுழற்'

## மன்மதனைப் பழித்தல்

(விருத்தம்)

17. தண்ணிலா மௌலிதந்த மையலா னதையறிந்தும்
தையலார்கள்
எண்ணிலாப் பகையெடுத்தார் இந்நகரை நன்னகரென்
றெவர்சொன் னாரோ
அண்ணலார் திரிகூட [1] நாதனா ரென்னளவும்
அமைந்தி டாரோ
வெண்ணிலாக் குடை[2]பிடித்த மீனகே தனம்[3]படைத்த
வேனி லானே.

நிலாமௌலி - சந்திரனைத் தலையிலணிந்தவர். பகை எடுத்தார் - அலர் (பழி) மொழிகளைக் கூறினார்கள். திரிகூட நாதனார் என்பதன் பொருளை 35 ஆம் பாட்டால் உணர்க. அமைந்திடாரோ - பொருந்தாரோ. நிலா மன்மதனுக்குக் குடை. மீனகேதனம் - மீன்கொடி. வேனிலான் - மன்மதன்; விளி.

(பி - ம்.) [1] 'நாதரென்ப தென்னளவு மமைத்திடாரோ' [2] 'பிடித்து' [3] 'பிடித்த'

(கண்ணிகள்)

இராகம் வராளி—தாளம் சாபு

18. (க) கைக்கரும் பென்ன கணையென்ன நீயென்ன
மன்மதா—இந்தச்
செக்கரும் பாவி நிலாவுமே போதாதோ—மன்மதா
மைக்கருங் கண்ணா ளிரதிக்கு [1] மால்கொண்டாய்
மன்மதா—விடை
வல்லார்க்கு மால்கொண்டால் பொல்லாப்பென்
மேலுண்டோ—மன்மதா.

(உ) திக்கெல்லாம் தென்றற் புலிவந்து பாயுதே
மன்மதா—குயிற்
சின்னம் [2] பிடித்தபின் அன்னம் பிடியாதே—மன்மதா
அக்கா ளொருஞ்சகி வெட்காம [3] லேசுறாள்
மன்மதா—அவள்
அல்லாமற் றாயொரு பொல்லாத கீலிகாண்—மன்மதா.

(ங) நேரிழை யாரையும் ஊரையும் பாரடா
மன்மதா—கண்ணில்
நித்திரை தானொரு சத்துரு வாச்சுதே—மன்மதா
பேரிகை [4] யேயன்றிப் பூரிகை யேன் பிள்ளாய்
மன்மதா—சிறு
பெண்பிள்ளை மேற்பொரு தாண்பிள்ளை யாவையோ
—மன்மதா.

(ச) வார்சடை யீதல்ல கார்குழற் பின்னல்காண்
மன்மதா—நெற்றி
வந்தது கண்ணல்ல சிந்தூர ரேகைபார்—மன்மதா
நாரிபங் காளர்தென் னாரிய நாட்டினர்
மன்மதா—எங்கள்
நன்னகர்க் குற்றாலர் முன்னமே செல்லுவாய்—மன்மதா.

(க) கரும்பு - மன்மதனதுவில். கணை - அம்பு. செக்கர் - மாலையில் தோன்றும் செவ்வானம்; காதலரைப் பிரிந்தாரை வருத்தும் பொருள்களுள் செக்கரும் ஒன்று; மைவானிறத்து மீனெயிற்று வாடையுயிர்ப்பின் வளர் செக்கர்ப், பைவாயந்திப் படவரவே யின்ன விளைத்துப் பகைத்தியால்' (கம்ப. மிதிலைக். 66.) போதாதோ: தலைவி காம மயக்கில் ஒருமையிற் கூறினள். (உ) குயில் மன்மதனுக்குச் சின்னம்; துளைக்கருவிகளுள் ஒன்று சின்னம். அன்னம் பிடியாது - எனக்கு உணவில் விருப்பம் இல்லை; அன்னம் என்ற பறவையின்பெயர் அமைந்தது ஒரு நயம். (ங) நேரிழை யாரையும் ஊரையும் பாராயோ: பெண்களும் ஊாரும் இரங்குவதும் பழிப்பதுவுமாக இருத்தலைப் பாராயோ; பெண்களுக்கு நல்லார் என்ற பெயர் உண்டு; இவ் வூருக்கு நன்னகர் என்ற பெயர் உண்டு; அதனால் நீ நல்ல ஊரிலுள்ள நல்லாரை வருத்தலாகாதென்பது குறிப்பினால் தோன்றும் நயமாகும். கடல் மன்மதனது பேரிகை. பூரிகை-ஊதுகுழல்; என்பது புல்லாங் குழலை உணர்த்

தும்; 'தாரை பூரிகைவளை துடி' (திருப்புகழ்.) பெண்களுக்கு விரகந்தரும் பொருள்களுள் கடலும் குழலும் சேரும். அன்றிற் பூரிகை என்ற பாடத்துக்கு, அன்றிலாகிய குழல் என்பது பொருள். காதலை ஊட்டும் பொருள்களுள் அன்றிற் பறவை ஒன்று. (ச) 'நீ அடர்ப்பதற்கு நான் சிவன் அல்லேன்' என்பது முதலிரண்டடியின் கருத்து; 'சடில மன்றுபைங் தார்க் குழற் பின்னல்கார், மிடறு தோன்றல் விடமன்று நானமே, உடல் விளர்ப்பு வெண் ணீறன் றுருவிலாய், அடர்வதென்னை அரன்அலன் காண்டியால்' (நைடத. மன்மதோ. 9) என்பதனோடு ஒப்பிடத் தக்கது இது.

(பி - ம்.) [1] 'மால்கொண்ட' [2] 'பிடித்தவ ரன்னம் பிடியாரோ' [3] 'லேசுவாள்' [4] 'யேனன்றிற் பூரிகை'

## பாங்கியின் புத்திமதி

(விருத்தம்)

19. வசந்தவுல் லாச வல்லி வல்லிக்கு வெல்லி பேசிப்
பசந்ததோர் பசப்புக் கொண்டாய் பரமர்மே லாசை [1] பூண்டாய்
நிசந்தருந் திருக்குற் றால நிரந்தர மூர்த்தி யுன்பால்
இசைந்திடக் கரும மேதோ [2] இசையநீ யிசைத்தி டாயே.

வல் இக்கு - வலிமை பொருந்திய கரும்பு. இக்கு வெல்லி - சொல்லின் இனிமையில் கரும்பை வென்றவளே; விளி. பசந்ததோர் பசப்பு: 'ஆகமெல்லாம் பசந்தேனே' (13.) இசைய - பொருந்தும்படி. இசைத்திடாய் - சொல்வாயாக.

(பி - ம்.) [1] 'கொண்டாய்' [2] 'இனியுன திச்சை தானே'

20. நன்னகர்த் திருக்குற் றால நாதர்மே லாசை பூண்டு
சொன்னவர்க் கிணங்க வார்த்தை சொல்லவும் படித்துக் கொண்டாய்
சன்னிதி விசேடம் சொல்லத் தக்கதோ மிக்க தோகாய்
என்னிலா னதுநான் சொன்னேன் இனியுன திச்சை தானே.

## வசந்தவல்லி பாங்கியைத் தூது விடுத்தல்

இராகம் பரசு—தாளம் ஆதி

21. ப. தூது நீ சொல்லி வாராய் பெண்ணே குற்றாலர் முன்னே
தூது நீ சொல்லி வாராய்

அ. ப. ஆதிநாட் சுந்தரர்க்குத் தூதுபோ னவர் முன்னே (தூது)

ச. (க) உறங்க உறக்கமும் வாராது—மாயஞ் செய்தாரை
மறந்தால் மறக்கவுங் கூடாது— பெண் சன்மமென்று
[1] பிறந்தார்க்குப் பேராசை யாகா—தென்று நானிருந்தும்
சலுகைக் காரர்க் காசை—யானேனிப் போது. (தூது)

(உ) வந்தாலிந் நேரம்வரச் சொல்லு—வாரா திருந்தால்
மாலையாகிலுந்தரச் சொல்லு—குற்றால நாதர்
தந்தாலென் னெஞ்சைத் தரச் சொல்லு—தாராதிருந்தால்
[2] தம்பெண்ணுகிய பெண்ணை—
நான்விடே னென்று சொல்லித் (தூது)

சுந்தரமூர்த்தி நாயனுரின் பொருட்டுப் பரவையாரிடம் தூதுசென்ற சிவபெருமானிடம். (க) சலுகைக்காரன் - செல்வம் ராஜசம் முதலிய வற்றில் செருக்குடையவன். (உ) தம்பெண்ணுகிய பெண் - தம் மனைவியாகிய திருமால்; திருமால் சத்தியின் அம்சம் என்பர் சைவர். மால் என்பதற்கு மயக்கம் என்பதும் பொருள் ஆதலின் இங்கே, 'மயக்கத்தை விடேன்' என்பது அர்த்தம். 'தாம் பெண்ணுக்கிய பெண்ணை' என்ற பாடத்துக்கு, 'திருஞான சம்பந்தரின் பொருட்டு ஈனுதனை ஈனும்வண்ணம் செய்த பனைமரம்' என்பது பொருள். இப்பொருளின்படி 'மடலேறுவேன்' என்பது குறிப்பு.

(பி - ம்.) [1] 'பிறந்தாலும் பேராசை யாகா தலைதறிந்தும்' [2] 'தாம் பெண்ணுக்கிய'

## குறத்தி வருகை

### (கட்டியக்காரன் அகவல்)

22. இலகு நீ றணிந்து திலகமு மெழுதிக்
குலமணிப் பாசியும் குன்றியும் புனைந்து
சலவைசேர் மருங்கிற் சாத்திய கூடையும்
வலதுகைப் பிடித்த மாத்திரைக் கோலும்
(ரு) மொழிக்கொரு பசப்பும் முலைக்கொரு குலுக்கும்
விழிக்கொரு சிமிட்டும் வெளிக்கொரு பகட்டுமாய்
உருவசி யரம்பை கருவமு மடங்க
முறுவலின் [1] குறும்பால் [2] முனிக்குறும் படங்கச்
சமனிக்கு முரையாற் சவையெலா மடங்கக்

(கo) கமனிக்கு மவரும் கடைக்கணு லடங்கக்
கொட்டிய வுடுக்குக் [3] கோடாங்கி குறிமுதல்
மட்டிலாக் குறிகளும் கட்டிஞ லடக்கிக்
கொங்கணர் ஆரியர் குச்சலர் தேசமும்
செங்கைமாத் திரைக்கோற் [4] செங்கோல் நடாத்திக்
(கரு) கன்னடம் தெலுங்கு கலிங்கராச் சியமும்
தென்னவர் தமிழாற் செயத்தம்ப நாட்டி
மன்னவர் தமக்கு வலதுகை நோக்கி
இன்னிசை மடவார்க் கிடதுகை பார்த்துக்
காலமுன் போங்குறி கைப்பல னுங்குறி
(உo) மேலினி வருங்குறி வேண்டுவார் மனக்குறி
மெய்க்குறி கைக்குறி விழிக்குறி மொழிக்குறி
எக்குறி யாயினும் இமைப்பினி லுரைக்கும்
மைக்குறி விழிக்குற வஞ்சிவந் தனளே.

(க) இலகு நீறு - விளங்குகின்ற விபூதி. (அ) முறுவல் - புன்சிரிப்பு. குறும்பு: முன்னது விஷமம்; பின்னது வலிமை. இங்கே வலிமை என்பது புலன்களை அடக்கும் ஆற்றல். (கூ) சமனித்தல் - அமைதியை உண்டு பண்ணுதல். (கo) கமனிக்குமவர் - வானவழியே நினைத்தவிடம் செல்லும் சித்தி வாய்ந்தவர்கள்; 'கவன சித்தர்' (24 : 1.) (கக) கோடாங்கி - உடுக்கடித்துக் குறிசொல்லுவோன்; இச்சொல் கோடங்கி என்றும் வழங்கும். (கஉ) கட்டு - குறி வகைகளுள் ஒன்று; 'கட்டினும் கழங்கினும்' (தொல். பொருள். சூ. 115.)

(பி - ம்.) [1] 'குறும்பலர்' [2] 'முனிவரும் அடங்க' [3] 'கோடங்கி' [4] 'செலுத்தித் தெலுங்கம், கன்னடம் சீனம் கலிங்க'

இராகம் சுருட்டி—தாளம் ஆதி

**23.** ப. வஞ்சி வந்தனளே மலைக்குற வஞ்சி வந்தனளே.

அ. ப. வஞ்சி எழிலப ரஞ்சி வரிவிழி
நஞ்சி முழுமற நெஞ்சி பலவினில்
அஞ்சு சடைமுடி விஞ்சை யமலனை
நெஞ்சில் நினைவொடு மிஞ்சு குறிசொல (வஞ்சி)

ச. (க) சோலையில் வசந்த காலம் வாலகோ கிலம்வந் தாற்போற்
கோலமலை வில்லி யார்குற் றாலமலை வாழுங் குற (வஞ்சி)
(உ) மாத்திரைக்கோ லது தன்னச் சாத்திரக்கண் பார்வைபன்னத்
தோத்திர வடிவ மின்னப் பூத்தமலர்க் கொடியென்ன (வஞ்சி)

மறம் - வீரம். அஞ்சு சடைமுடி. சடையணிந்த ஐந்து தலைகளையுடைய. (க) வால கோகிலம் - இளங் குயில். (உ) சாத்திரக் கண்பார்வை - குறிசாத்திரத்தை விளக்கும் கண்ணின் பார்வை. பன்ன - குறிகூறும் திறனைப் பலகாலும் கூற.

## குறத்தி மலைவளம் கூறுதல்

இராகம் நாதநாமக்கிரியை—தாளம் திஸ்ரகதி ஆதி

24. (க) வானரங்கள் கனிகொடுத்து மந்தியொடு கொஞ்சும்
மந்திசிந்து கனிகளுக்கு வான்கவிகள் கெஞ்சும்
தேனருவித் திரையெழும்பி வானின்வழி யொழுகும்
செங்கதிரோன் பரிக்காலும் தேர்காலும் வழுகும்
கானவர்கள் விழியெறிந்து வானவரை யழைப்பார்
கவனசித்தர் வந்துவந்து காயசித்தி விளைப்பார்
கூனலிளம் பிறைமுடித்த வேணியலங் காரர்
குற்றாலத் திரிகூட மலையெங்கள் மலையே.
(உ) முழங்குதிரைப் புனலருவி கழங்கெனமுத் தாடும்
முற்றமெங்கும் பரந்து பெண்கள் சிற்றிலைக்கொண்டோடும்
கிழங்குகிள்ளித் தேனெடுத்து [1] வளம்பாடி நடிப்போம்
கிம்புரியின் கொம்பொடித்து வெம்புதினை [2]யிடிப்போம்
செழுங்குரங்கு தேமாவின் பழங்களைப்பந் தடிக்கும்
தேனலர்சண் பகவாசம் வானுலகில் வெடிக்கும்
வழங்குகொடை மகராசர் குறும்பலவி லீசர்
வளம்பெருகுந் திரிகூட மலையெங்கள் மலையே.
(ங) கயிலையெனும் வடமலைக்குத் தெற்குமலை யம்மே
கனகமகா மேருவென நிற்குமலை யம்மே
[3] சயிலமுனி தென்மலைக்கு வடக்குமலை யம்மே
சகலமலை யுந்தனக்கு [4] ளடக்குமலை யம்மே

வயிரமுடன் மாணிக்கம் விளையுமலை யம்மே
[5] வான்ரவி முழைகடொறும் நுழையுமலை யம்மே
துயிலுமவன் விழிப்பாகி அகிலமெங்குந் தேடும்
துங்கத்திரி [6] கூடமெங்கள் சொந்தமலை யம்மே.

(க) மந்தி - பெண் குரங்கு. வான்கவிகள் - வானுலகிலுள்ள குரங்குகள்; தேவர் என்பாரும் உளர். குற்றால மலை தேவலோகத்தினும் உயர்ந்தது என்பது கருத்து. தேன் அருவி - இத்தலத்துத் தீர்த்தங்களுள் ஒன்று. பரி குதிரை. தேர்க்கால்; கால் - சக்கரம். கவனசித்தர்: 22, குறிப்.

(உ) திரை - அலைகளையுடைய. முத்தாடும் - முத்துக்களை (க்கழங்கென வீசி) ஆடும். முற்றம் - குறவர் குடில்களின் முன்வாசல். சிற்றில் - சிறுமியர் மண்ணினாற் கட்டி விளையாடும் வீடு. வளம் - மலைவளத்தை. கிம்புரி - யானைக்கொம்பிற் பூண். வெம்பு - காய்ந்த. தேமா - இனியமாமரத்தின். சண்பகவாசம்: இத்தலத்தைச் சார்ந்த பூஞ்சோலைக்குச் சண்பகாரண்யம் என்று பெயர்வழங்கும்.

(௩) சயிலமுனி - அகத்தியமுனிவர். முழைகள் - மலைக்குகைகள். துயிலுமவன் - திருமால்.

(பி - ம்.) [1] 'பழங்களைப்பக் தடிப்பார்' [2] 'யிடிப்பார்' [3] 'சயிலமலை' [4] 'ஙடங்குமலை' [5] 'வாளிரவி' [6] 'கூடமலை யெங்கள்மலை'

## குறத்தியின் மறுமொழி

### இராகம் நவரோஸ்—தாளம் ஆதி

25. (க) என்னகுறி யாகிலும்நான் சொல்லுவே னம்மே—சதுர்
ஏறுவேன் எதிர்த்த பேரை வெல்லுவே னம்மே
[1]பின்னமின்றிக் கூழெனினும் கொண்டுவா அம்மே—வந்தால்
பெரியதொரு குடுக்கைமுட்ட மண்டுவே னம்மே.

(உ) தின்னவிலை யும்பிளவும் அள்ளித்தா அம்மே—கப்பற்
சீனச்சரக் குத்துக்கிணி கிள்ளித்தா அம்மே
மன்னவர்கள் மெச்சுகுற வஞ்சி நானம்மே—என்றன்
வயிற்றுக்கித் தனைபோதக் கஞ்சி வாரம்மே.

(௩) விம்முமுலைக் கன்னிசொன்ன பேச்சு நன்றம்மே—நேரே
மேல்புறத்தி லாந்தையிட்ட வீச்சு நன்றம்மே
செம்மையிது நன்னிமித்தம் கண்டு பாரம்மே—திரி
கூடமலைத் தெய்வமுனக் குண்டுகாணம்மே.

(க) சதுர் ஏறல் - சமர்த்தராதல். முட்ட - நிறைய. மண்டுதல் - குடித்தல். (உ) இலை - வெற்றிலை. பிளவு - பாக்கு. சீனச்சரக்கு - அபினி; கஞ்சாவும் ஆம். துக்கிணி—சிறிய அளவைக் குறிப்பிடும் சொல். (ரு) ஆந்தையிட்ட வீச்சு நன்று: 'கிளை கூட்டும் புற்றாந்தை வீச்சழகிதம்மே' (மீனாட்சி. குறம், 27.)

(பி - ம்.) [1] 'பின்னை மண்டக் கூழெனக்குக்'

## வசந்தவல்லி குறி கேட்டல்

(விருத்தம்)

26. [1] கலகிக்கும் விழிவாள் கொண்டு காமனைச் சிங்கி கொள்வாய்
குலவித்தை குறியே யானாற் குறவஞ்சி குறைவைப் பாயோ
பலவுக்குட் கனியாய் நின்ற பரமர்குற் றாலர் நாட்டில்
இலவுக்குஞ் சிவந்த வாயால் எனக்கொரு குறிசொல் வாயே.

கலகிக்கும் - கலகத்தை உண்டுபண்ணும். இலவுக்கும் - இலவம்பூவைக் காட்டிலும்.

(பி - ம்.) [1] 'கலவிக்கு'

## குறத்தி கையைக் கேட்டல்

இராகம் மோகனம்—தாளம் ரூபகம்

27. (க) முத்திரைமோ திரமிட்ட கையைக் காட்டாய்—அம்மே
முன்கை முதாரியிட்ட கையைக் காட்டாய்
அத்தகடகம்புனைந்த கையைக் காட்டாய்—பொன்னின்
அலங்கார நெளியிட்ட கையைக் காட்டாய்.
(உ) சித்திரச்சூ டகமிட்ட கையைக் காட்டாய்—பசுஞ்
செங்கமலச் சங்கரேகைக் கையைக் காட்டாய்
சத்திபீ டத்திறைவர் [1] நன்னகர்ப் பெண்ணே—பெண்கள்
சஞ்சீவி யேயுனது கையைக் காட்டாய்.

(க) முதாரி - கைவளை வகைகளுள் ஒன்று; 'அந்த, நாரியும் முன்கை முதாரியும் சொன்ன மாரியாய் வாரித்தந்தாள்' (கும்பேசர் குற. 63.) அத்தகடம் - கைவளையல்; ஒரு பொன்னுபாரணம். நெளி - வளைவான மோதிரம். (உ) செங்கமலச் சங்கரேகை - கமலத்தின் வடிவாகவும் சங்கின் வடிவாகவும்

அமைந்த ரேகைகள் ; சங்கநிதி பதுமநிதிபோன்ற செல்வத்தைக் காட்டுவன இவை என்பார்.

(பி-ம்.) 'நன்னகர்க்குளே - வந்த'

## குறத்தி வசந்தவல்லியின் கையைப் புகழ்தல்

### இராகம் சுருட்டி—தாளம் ரூபகம்

28. (க) மாரும விருநிலத்தில் அறம்வளர்க்கும் கையே
மனையறத்தால் [1] அறம்பெருக்கித் திறம்வளர்க்கும் கையே
ஆரூத சனங்கள்பசி ஆற்றுமிந்தக் கையே
அணங்கனையார் வணங்கிநித்தம் போற்றுமிந்தக் கையே.

(உ) பேருக நன்னகரங் காக்குமிந்தக் கையே
பிறவாத நெறியார்க்கே ஏற்குமிந்தக் கையே
வீருக [2] நவநிதியம் அளையுமிந்தக் கையே
மேன்மேலும் [3] பாக்கியங்கள் விளையுமிந்தக் கையே.

(உ) பிறவாத நெறியார் - அழிவில்லாத முத்திக்கு வழிகாட்டும் திரிகூடநாதர். வீறு - பிறருக்கில்லாத பெருமை.

(பி-ம்.) [1] 'இருபொழுதும்' [2] 'நினைத்தபொருள் விளையு' [3] 'பாலமுத மளையு'

## குறத்தி குறி கூறல்

### இராகம் காபி—தாளம் ஆதி

29. (க) சொல்லக்கேளாய்குறி சொல்லக்கேளாய்—அம்மே
தோகையர்க் [1] கெலாமரசே சொல்லக்கேளாய் ;
முல்லைப்பூம் குழலாளே நன்னகரில்வாழ்—முத்து
மோகனப் பசுங்கிளியே சொல்லக் கேளாய்.

(உ) பல்லக்கே றுந்தெருவி [2] லானைநடத்தி—மணிப்
பணியா பரணம்பூண்ட பார்த்திபன்வந்தான்
செல்வப்பூங் கோதாய்நீ பந்தடிக்கையிலே—அவன்
சேனைகண்ட வெருட்சிபோலக் காணுதேயம்மே.

(உ) ஆனை - காளையை. பணி ஆபரணம் - பாம்பாகிய நகை. சேனை - பரிவாரங்கள். தொடக்கத்தில் உண்மை கூறிவிடாமல் அதற்குத் தொடர்

பான ஒன்றை வசந்தவல்லியின் மருட்சிக்குக் காரணமாகக் கூறியது குறத்தியின் திறமையைக் காட்டும்.

(பி - ம்.) [1] 'கரசேகுறி' [2] 'ஆணை நடத்தும் - இந்தப்'

வசந்தவல்லி வெருட்சியல்லவென்று மறுத்தல்

30. (க) நன்று நன்று குறவஞ்சி நாடகக் காரி—இந்த
நாட்டம்போக் கானவார்த்தை நானறியேனே
ஒன்றுபோ டாமற்குறி சொல்லியே வந்தாய்—பின்னை
உழப்பிப்போட் டாய்க்குறியைக் குழப்பிப் போட்டாய்.

(உ) மன்றில்வருஞ் சேனைதனைக் கண்டுபயந்தால்—இந்த
மையலுங் கிறுகிறுப்பும் தையலார்க் குண்டோ
[1] இன்றுவரை மேற்குளிருங் காய்ச்சலு முண்டோ—இதை
[2] இன்னவித மென்றுகுறி கண்டுசொல்லடி.

(க) மன்று - பொதுவிடம். (உ) வரைமேல் - குற்றால மலைமேல், 'சில மலைகளில் குளிரும் காய்ச்சலும் உண்டு; குற்றால மலையில் இல்லை' என்பது கருத்து.

(பி - ம்.) [1] 'இன்று வரவெக் குளிருங்' [2] 'எந்தவகையென்று'

குறத்தியின் மறுமொழி

31. (க) வாகனத்தில் ஏறிவரும் யோகபுருடன்—அவன்
வங்காரப் பவனியாசைப் பெண்களுக்குள்ளே
தோகைநீ யவனைக்கண்டு மோகித்தாயம்மே—அது
சொல்லப் பயந்திருந்தேன் சொல்லுவேன் முன்னே.

(உ) காகமணு காதகிரி கூடமலைக்கே—உன்மேற்
காய்ச்சலல்ல காய்ச்சலல்ல காமக்காய்ச்சல் காண்
மோகினியே உன்னுடைய கிறுகிறுப்பெலாம்—[1] அவனை
[2] மோகித்த கிறுகிறுப்படி மோகனக் கள்ளி.

(க) வங்காரம் - பொன். (உ) காகமணுகாதமலை: 11.

(பி - ம்.) [1] 'அவன்' [2] 'மோகக்கிறு கிறுப்படி'

வசந்தவல்லி பின்னும் மறுத்து வினவுதல்

32. கன்னியென்று நானிருக்க நன்னகர்க்குளே—என்னைக்
காமியென்றாய் குறவஞ்சி வாய்மதியாமல்

சன்னையாகச் சொன்னகுறி சாதிப்பாயானால்—இந்தத்
தாரணியில் ஊரும்பேரும் தாரும் சொல்லடி.

## குறத்தியின் பதில்

33. உன்னைப்போல் எனக்குமவன் அறிமுகமோ—அம்மே
ஊரும்பேரும் சொல்லுவதும் குறிமுகமோ
பின்னையுந்தான் உனக்காகச் சொல்லுவேனம்மே—அவன்
பெண்ணைச்சேர வல்லவன்காண் பெண்கட்கரசே.

## வசந்தவல்லி உண்மை கூறும்படி கேட்டல்

34. வண்மையோ வாய்மதமோ வித்தைமதமோ—என்முன்
மதியாமற் பெண்ணைச்சேர வல்லவன் என்றாய்
கண்மயக்கால் மயக்காதே உண்மைசொல்லடி—பெரும்
கானமலைக் குறவஞ்சி கள்ளிமயிலே.

(க) பெண்ணைச்சேரவல்லவன் - உமையவளை ' ஒரு கூறாகச் சேரவல்லவன். 'உன்னைச் சேரவல்லவன்' என்பது குறிப்பு.

## குறத்தி தலைவன் பெயரைக் கூறல்

இராகம் நாதநாமக்கிரியை—தாளம் ரூபகம்

35. பெண்ணரசே பெண்ணென்றால் திரியும் ஒக்கும்—ஒரு
பெண்ணுடனே சேரவென்றால் கூடவும் ஒக்கும்
திண்ணமாக வல்லவனும் நாதனும் ஒக்கும்—பேரைத்
திரிகூட நாதனென்றே செப்பலாமம்மே.

திரி = ஸ்த்ரீ - பெண். வல்லவன் = வல்லபன் - நாதன். திரிகூட நாதன் என்பதற்கு இங்கே ஆசிரியர் 'ஸ்த்ரீயைக் கூடுவதற்குத் தலைவன்' என்று கூறியுள்ள நயம் பாராட்டத்தக்கது.

## கட்டியக்காரன் வார்த்தை

36. மன்னர்திரி கூடநாத ரென்னும் போதிலே—முகம்
மாணிக்க வசந்தவல்லி நாணிக் கவிழ்ந்தாள்.

### வசந்தவல்லி நாணுவதைக்கண்டு குறத்தி கூறல்

இராகம் நாதநாமக்கிரியை—தாளம் ரூபகம்

37. நன்னகரில் ஈசருனை மேவவருவார்—இந்த
நாணமெல்லாம் நாளைநானுங் காணவே போறேன்
கைந்நொடியிற் பொன்னிதழி மாலைவருங்காண்—இனிக்
கக்கத்தில் இடுக்குவாயோ வெட்கத்தையம்மே.

### கட்டியக்காரன் கூறுதல்

38. என்னுமொரு குறவஞ்சி தன்னையழைத்தே—அவட்
கிட்டசரு வாபரணம் பூட்டினாளே.

அவட் கிட்ட சருவாபரணம் - அவளுக்கு இஷ்டமான சகல நகைகளையும்.

### வாழ்த்து

இராகம் மத்தியமாவதி—தாளம் ஜம்பை

39. (க) கொற்றமதிச் சடையானைக் குறும்பலா உடையானை
வெற்றிமழுப் படையானை விடையானை வாழ்த்துகிறேன்.

(உ) தாதையிலாத் திருமகனைத் தடமலைக்கு மருமகனை
வேதசங்க வீதியனை [1] வேதியனை வாழ்த்துகிறேன்.

(ங) பனகவணி பூண்டவனைப் பத்தர்களை யாண்டவனை
அனவரத தாண்டவனை ஆண்டவனை வாழ்த்துகிறேன்.

(ச) சித்ரநதி யிடத்தானைத் தேனருவித் தடத்தானைச்
சித்ரசபை நடத்தானைத் திடத்தானை வாழ்த்துகிறேன்.

(ரு) சிற்றாற்றங் கரையானைத் திரிகூட வரையானைக்
குற்றாலத் [2] துறைவானைக் குருபரனை வாழ்த்துகிறேன்.

(உ) தடமலை - விசாலமான மலை; பார்வதியைப்பெற்ற இமயமலை. (3) அனவரத தாண்டவன் - எப்பொழுதும் நடன மாடுகிறவன். (ச) திருக் குற்றாலம் சித்திரசபை அமைந்த இடம்.

(பி - ம்.) [1] 'விமலனையே' [2] 'துறைபரனைக்'

திருக்குற்றாலக் குறவஞ்சி முற்றும்.

---

# KUTRALA KURAVANJI

## (A Temple Drama)

### *Introduction*

KURAVANJIS are Tamil Dramas of old, the present one hailing from the beginning of the 18th century. They portray in a symbolical and dramatized form the devotion of the Soul aspiring to God. They are called Kuravanjis because a Kurathi or Soothsayer is an essential character.

The play now presented by Rukmini Devi is called the Thirukutrala Kuravanji and was composed by Thirukuda Rajappa Kavirayar. The author was a poet of great merit born near Kutralam, Tinnevelly District, about two hundred and fifty years ago. The Kuravanji has been adjudged by scholars of repute as of the greatest poetic and dramatic excellence.

During the last fifty years, these dramas, which were an inevitable feature of all temple festivals, fell into disuse due to lack of patronage. Today it is performed only in the Brahadeswara Temple at Tanjore. At one time, even this Kuravanji must have been devotional in character but owing to the tide of decadence which was then beginning to overwhelm our country, it lost its religious nature and became dedicated to Maharajah Serfoji of Tanjore, who himself is the hero of the play, instead of the deity. In the Kuravanji as presented at Tanjore hardly any attempt is made at dramatic presentation. It is more or less a number of dances strung very loosely together on a vague dramatic plot. The characters are dressed in the usual costumes that were worn during dance recitals. Their cheap tinsel contrasts very oddly with the beautiful old jewels which are often worn by them and look so out of place with the costumes. The music is, ordinarily, very poor.

The tone of this Kuravanji has been established by Rukmini Devi on a classical basis. Though she had little foundation of a living art on which to base her presentation, yet through conversing with those who have witnessed Kuravanjis in their youth, and through her own instinctive feeling for artistic reality and truth, she has been able to revive the

ancient and spiritual presentation of the Kuravanji. Even the very costumes and style of hair-dressing have been subjects of research and study, and carry with them the stamp and atmosphere of authenticity based as they are on the essential characteristics of the ancient Tamil dress. The accuracy of our knowledge regarding the way in which women wore their saris in those days may be questioned. It has been Rukmini Devi's desire to reconstruct these so that they accord more with the spirit of those times than with a literal copying of any period. Through her creative imagination she made of the Kuravanji a thing of beauty which can be enjoyed not only by those who know Tamil and can therefore appreciate the high poetic beauty of the songs, but by anyone who has an eye or an ear for the beautiful. The music for this dance drama has been composed by Sriman Sangitha Sahitya Vidwan Veenai K. Krishnamachariar, the Director of the Natya and Music Section of Kalakshetra, than whom no one is more fitted to interpret songs intended for the dance.

The present performance is the third of Rukmini Devi's definite achievements in the realm of art reclamation. First she learned the indigenous dance of Tamil land and rescued it from languishing in the hands of an exclusive caste; then she learned and taught the art of Nattuvam—the conductor's part of the dance—which was also hitherto in the hands of an exclusive caste. Now she presents Kuravanji, an ancient dance drama of the Tamil countries. So many Kuravanjis are still known in literature, but except for the one annually performed at Tanjore, the others remain only as survivals of a literary form. So much has this dance drama decayed. With infinite patience and genius Rukmini Devi has now succeeded in rebuilding the glories of the most beautiful of all Kuravanjis. In discovering and presenting it her object is not merely to give a pleasant evening but to reveal an object of patriotic, historical, and cultural value, for what you see is not the ingenuity merely of an artist, but the soul of a people of long ago.

## SYNOPSIS

I. ENTER THE KATTIAKKARAN who describes in song a procession of Lord Siva, the presiding Deity of Kutralam. He sings of the Lord as being surrounded by Devas and Bhutaganas. He describes the Triune

Lord mounted on Nandi, one hand raised in protection, another in blessing, one holding the battle axe and another a deer. Round His loins is the tiger skin of the Yogi-Ascetic and covering His body is the hide of an elephant.

II. ENTER THE SAKHIS. They also sing of the indescribable beauty of the Lord, and speak of Him as He who, carrying a deer in His hand is, therefore, pursued by a herd of these lovely creatures. At first they wonder who this Being of Splendour is, but at last they recognize Him as Thirukudanadha. In their eagerness to see the procession, they have all run out of the houses in a state of insufficient preparation. One has her garments awry. Another has not put on her ornaments. A third has darkened only one eye, and so on. Yet they follow the procession, for they cannot take their eyes away from Him who sheds glory all around Him.

III. ENTER VASANTA VALLI, the Heroine, playing with a ball. The Sakhis surround her, singing of her at play. But suddenly she sees the procession in the distance and is struck with love for the Lord. She sings of His ornament of hooded serpents, His throat dark with the lustre of poison, and of the depths of His hair, ornamented with the crescent moon. His look of infinite compassion plays upon her. All strength leaves her and she sits down as one bemused. Her friends, distressed at her condition, try to revive her. She sings to the full moon, in wonder that He who is born with the nectar from the ocean should have forgotten the coolness of the ocean and become like a ball of fire.

IV. Vasanta Valli enters and sings to the Lord of Love, imploring him to forget his anger towards the Lord Siva, and reminding him of his love for Rathi. She is unable to bear the sound of the birds, and of the cool breeze which is like the hiss of a tiger. She implores him not to mistake her beautiful long hair for the hooded serpent that Lord Siva wears as a garland and the sindhura tilaka on her forehead for the third eye of the Lord. As Vasanta Valli deplores her state, one of her friends advises her to forget the Lord, for He may not be approached by a human being. However, she beseeches her friend to go to Lord Siva on her behalf, to describe her agony to Him and to bring her a message from Him.

V. As the messenger departs, she meets a Kurathi or gypsy woman whose arrival is announced. ENTER THE KURATHI who first describes the land from which she comes—the hills of Kutralam, the music of the waterfalls, the murmur of the many streams that abound, the forest, green

with beautiful trees and pervaded with the scent of flowers. She talks of her occult powers, and Vasanta Valli requests her to read her palm and to tell her fortune. The Kurathi, after making certain mystic preparations, reads the heroine's palm and explains in somewhat ambiguous terms that the cause of her malady is that she has fallen in love. Though understanding what the gypsy means, Vasanta Valli asks her to speak plainly, so that she may clearly know whether she will be united with the Lord. The gypsy replies that her fever is only the fever of love—love for the Lord. As Vasanta Valli hangs her head down in shyness, her friends believe that the gypsy's diagnosis is a true one, also because the very face of the heroine betrays the feeling that she entertains for the Divine Lover. The Kurathi, having finished her work, takes leave of Vasanta Valli, telling her that she will come again at a time when gifts will arrive from Lord Siva, thus intimating to her that the Lord will finally accept her. Heartened and overjoyed with this assurance, Vasanta Valli gives the Kurathi rich presents and bids her farewell.

---

Printed by C. Subbarayudu, at the Vasanta Press, Adyar, Madras